# நமது பழங்குடிகள்

[இந்திய அரசாங்கப் பரிசு பெற்றது]

ப. ஸ்ரீனிவாசன்




தமிழ்ப் புத்தகாலயம்
393, பைகிராப்ட்ஸ் ரோடு,
சென்னை-14.

பதிப்பு : ஜனவரி 1961
உரிமை பதிவு

[முதியோர் கல்விப் புத்தகங்களுக்காக மத்திய அரசாங்கக் கல்வி [அமைச்சகம் நடத்திய 7-வது போட்டியில் பரிசு பெற்ற புத்தகம்]

Namadu Palangudikal (Tamil)

Y72
N61

விலை 50 நயா பைசாக்கள்




TAMIL PUTHAKALAYAM
393, Pycrofts Road, Madras—14

மெட்ரோபாலிடன் பிரிண்டர்ஸ், சென்னை-2

# 1. பழங் குடிகள் யார்?

உங்கள் கிராமத்தில் ஐநூறு பேர் வசிப்பதாக வைத்துக் கொள்வோம். அதுவே உங்களுக்குப் பெரிய தொகையாகத் தோன்றலாம். ஆனால் கிராமத்தை விட எவ்வளவோ பெரியது தமிழ் நாடு. தமிழ் நாட்டிலே மூன்று கோடி மக்களுக்கு மேல் வசிக்கிறார்கள். இந்தியா தேசத்தின் ஒரு பகுதியே தமிழ் நாடு. நமது தேசம் முழுவதிலும் சுமார் நாற்பது கோடி மக்கள் உள்ளனர்.

இந்திய மக்கள் அனைவரும் ஒரே மாதிரியானவர்கள் அல்ல. அவர்கள் இடையே நிறத்தில் வித்தியாசம் உண்டு. அவர்கள் பல்வேறு மொழிகளைப் பேசுகிறார்கள். வெவ்வேறு மதங்களைப் பின்பற்றுகிறார்கள். உணவு வகைகளிலும் வேற்றுமை காணப்படுகிறது. உடைகளும் அப்படியே. ஆனால், வித்தியாசங்கள் இருந்தாலும் எல்லோரும் இந்நாட்டு மக்கள்தாம். சகோதரர்கள் இடையே பல வேறுபாடுகள் இருக்கலாம். எனினும் எல்லோரும் ஒரு தாயின் மக்களே.

இந்திய மக்கள் எல்லோரும் ஆதி முதல் இந்நாட்டில் வசிப்பவர்கள் அல்ல. வெளியே யிருந்து வெவ்வேறு காலங்களில் பல இனத்தினர் இங்கு

குடியேறினர். காலப் போக்கில் அவர்கள் கலந்து ஒரே நாட்டார் ஆகிவிட்டார்கள்.

இந்நாட்டிலேயே தோன்றிய இனத்தார் யார் என்று தெரியவில்லை. ஆனால் மற்ற எல்லாருக்கும் முன்னால் இங்கு வாழ்ந்தவர்கள் யார் என்று சொல்ல முடியும். அவர்களது சந்ததியார் இன்னமும் இருக் கிறார்கள். இவர்களைப் பழங்குடிகள், மலை சாதி யார், வனவாசிகள் என்றெல்லாம் அழைக்கிறோம்.



முன் காலத்தில் நாடு முழுதிலும் இவர்கள் பரவி யிருந்தார்கள். இந் நாட்டு வளம் எல்லாம் இவர்களுக்குச் சொந்தமாய் இருந்தது. பிறகு அலை அலையாக வெளிநாட்டார் வந்து குடியேறினர். வந்த வர்களுக்கு வலிமை அதிகம். பழங் குடிகளை அவர் கள் விரட்ட ஆரம்பித்தார்கள். இரு சாராருக்கும் சண்டைகள் மூண்டன. பழங் குடிகள் தோற்றனர்.

அவர்களில் பலர், காடு மலைகளில் தஞ்சம் புகுந்தனர். சில பிரிவினர் புது இனத்தாரின் அடிமைகள் ஆயினர். இன்னும் சிலர், கீழ் சாதிகளில் சேர்க்கப்பட்டார்கள். வேறு சிலர் திருடுதல் போன்ற குற்றங்களைக் குலத்தொழிலாகக் கொண்டனர்.

இவ்வாறு, நாட்டு மக்கள் காட்டு மக்கள் ஆனார்கள். வெளியாருக்குப் பயந்து அவர்கள் ஒதுங்கி வாழ்ந்தார்கள். நெடுங்காலமாக வெளி உலகத்துடன் அவர்களுக்குத் தொடர்பே இல்லை. அவ்வப்போது நாட்டில் ஏற்பட்ட மாறுதல்கள் அவர்களை எட்டவில்லை. பல நூற்றாண்டுகளாக அவர்களது வாழ்க்கை மாறவே யில்லை.

இப்போது நம்நாட்டில் சுமார் இரண்டு கோடிப் பழங் குடிகள் இருக்கிறார்கள். தமிழ் நாட்டு ஜனத் தொகையில் சுமார் மூன்றில் இரு பங்குச் சமம் இது.

இந்தப் பழங் குடிகள் எல்லோரும் ஒரே இனத்தார் அல்ல. பல வகைகள் உண்டு. அவர்கள் ஒரே பிரதேசத்தில் வசிப்பவர்களும் அல்ல. நாட்டின் பல்வேறு பகுதிகளில் சிதறிக்கிடக்கிறார்கள். வாழும் இடத்தைக் கொண்டு இவர்களை நான்குவகையாகப் பிரிக்கலாம். நாட்டின் தென்பாகத்தில் ஒரு பிரிவினர் உள்ளனர். நாட்டின் மத்திய பாகத்தில் வசிப்போர் இரண்டாவது பிரிவினர். வட கிழக்குப் பகுதியில் மூன்றாவது பிரிவினர் வாழ்கிறார்கள்.

அந்தமான், நிக்கோபார் என்ற தீவுகளில் கடைசிப் பிரிவினர் உள்ளனர். நம் நாட்டின் தென்

கிழக்கே இந்தத் தீவுகள் இருக்கின்றன. இவை நமக்குச் சொந்தமானவை. கடலால் சூழப்பட்ட நிலப் பரப்புக்குத் தீவு என்று பெயர். அந்தமான் பற்றி நீங்கள் கேள்விப்பட்டிருக்கலாம். முன்பு கொடிய குற்றம் செய்தவர்களை அந்தத் தீவுகளுக் குச் சர்க்கார் அனுப்பினார்கள். ஆங்கிலேயர் நம் நாட்டை ஆண்ட போது இவ்வாறு செய்தனர். தேச பக்தர்களும் இத்தீவுகளுக்குக் கடத்தப்பட்டனர். நம் நாடு விடுதலை பெற்ற பின் இந்த வழக்கத்தை நிறுத்தி விட்டோம். இந்தத் தீவுகளில் அபூர்வமான பழங்குடிகள் வசிக்கிறார்கள்.

# ௨. தென்னாட்டுப் பழங் குடிகள்

பழங் குடிகளில் மிகவும் புராதனமானவர்கள் தென்னாட்டில் உள்ளனர். இவர்கள் தொகை இருபது இலட்சத்துக்கு மேல் இருக்கும். சுமார் அறுபது வகைகளைச் சேர்ந்தவர்கள் இவர்கள். தென்னாட்டின் மேற்கு ஓரமாய் ஒரு மலைத் தொடர் இருக்கிறது. அங்கு இவர்கள் வசிக்கிறார்கள். கிழக்கு ஓர மலைத் தொடரின் வட பாகத்திலும் பழங் குடிகள் உண்டு.

இந்தப் பழங் குடிப் பிரதேசங்கள் நான்கு இராச்சியங்களில் உள்ளன. மலையாள மொழி வழங்கும் கேரள இராச்சியம் இவற்றுள் ஒன்று. தமிழ் மொழி வழங்கும் சென்னை இராச்சியம் இரண்டாவது. கன்னட மொழி வழங்கும் மைசூர் மூன்றாவது. நான்காவது இராச்சியமாகிய ஆந்திரத்தில் தெலுங்கு மொழி வழங்குகிறது.

பழைய தமிழ் நூல்களில் பழங் குடிகளின் பெயர்களைக் காணலாம். அக் காலத் தமிழர்கள் நிலத்தை ஐந்து வகையாகப் பிரித்திருந்தார்கள். இவற்றுள் ஒன்று குறிஞ்சி. மலைப் பிரதேசம் இது. இந்த நிலத்துக்கு உரிய தெய்வம் குமரன். இன்னொன்று முல்லை. அது காட்டுப் பிரதேசம். அதன்

தெய்வம் மாயோன் அல்லது விஷ்ணு. வயல் பிரதேசத்துக்கு மருதம் என்று பெயர். கடல் ஓரப் பகுதி நெய்தல். ஒன்றுமே விளையாத பாழ் நிலம் ஐந்தாவது. அதன் பெயர் பாலை. இந்த நிலங்களின் குடிகளையும் மற்ற விபரங்களையும் தமிழ் நூல்கள் வருணிக்கின்றன. இப்போதும் குறிஞ்சி, முல்லை நிலங்களில் பழங் குடிகள் வாழ்கிறார்கள். முருகனையும் மாயனையும் அவர்களில் பலர் வழி படுகின்றனர்.

தென்னாட்டுப் பழங் குடிகளின் ஆதி பாஷைகள் எவை என்று தெரியவில்லை. தற்போது திராவிட பாஷைகளின் சார்பு மொழிகளை அவர்கள் பேசுகிறார்கள். தமிழ், மலையாளம், கன்னடம், தெலுங்கு ஆகியவை திராவிட மொழிகள்.

தென்னாட்டுப் பழங் குடிகள் குட்டையாகவோ நடுத்தரமாகவோ இருக்கிறார்கள். கபில நிறம் உள்ளவர்கள். மூக்கு தட்டையாகவும் விரிந்தும் இருக்கிறது. நீண்ட தலையும் தடித்த உதடுகளும் கொண்டவர்கள். சில பிரிவினரின் தலை முடி பரட்டையாகவும் சுருட்டையாகவும் இருக்கிறது. இந்தப் பழங்குடிகள் நல்ல உடல் கட்டு வாய்ந்தவர்கள்.

இந்தக் குடிகளில் பலருக்குப் பயிர் செய்யத் தெரியாது. இயற்கையாக விளைந்த உணவுகளைச் சேகரித்து உண்கிறார்கள். தேன், காட்டுத் தானியங்கள், பழங்கள், கிழங்குகள் முதலியவை இவ்வாறு கிடைக்கின்றன. அதோடு, சிறு பிராணிகளை வேட்டையாடுகின்றனர். உணவு தேடி இடம்விட்டு

இடம் செல்கிறார்கள். கூரிய மரக் கொம்பு, துரட்டி முதலியவையே இவர்களது ஆயுதங்கள். சக்கி முக்கிக் கல்லைத் தேய்த்தோ, கட்டையைக் கடைந்தோ நெருப்பு உண்டாக்குகிறார்கள். சமீப காலம் வரை இவர்கள் மரவுரியே உடுத்தி வந்தார்கள். இப்போது தான் துணி உடுத்துகிறார்கள்.

வேறு சில பழங்குடிகளுக்கு விவசாயம் ஓரளவு தெரியும். இவர்கள் காட்டில் ஒரு பகுதியில் உள்ள செடி கொடிகளைக் கொளுத்திச் சாம்பலாக்குவர். பிறகு அந்த இடத்தில் தானியங்களை விதைப்பார்கள். மழை பெய்ததும் அவை முளைவிட்டு வளரும். அறுவடை செய்த பின் வேறு இடத்துக்குப் போவார்கள். அங்கும் இதேபோல் விதைப்பார்கள்.

இன்னும் சில பழங் குடிகள் நிலையான வேளாண்மை செய்கிறார்கள். மற்றப் பழங் குடிகளை விட இவர்கள் அதிகமாக முன்னேறி யுள்ளனர்.

தென்னாட்டுப் பழங் குடிகள் சிறு சிறுகூட்டங்களாக வாழ்கிறார்கள். ஒவ்வொரு கூட்டத்துக்கும் ஒரு நாட்டாண்மைக்காரர் உண்டு. வழக்குகளை அவர் தீர்த்து வைக்கிறார். வேட்டை சம்பந்தமான சடங்குகளையும் நடத்துகிறார்.

சில பழங்குடிகள் தாய் வழியைப் பின்பற்றுகிறார்கள். அதாவது, தகப்பனுக்குப் பதில் தாயின் பெயரால் வமிச பரம்பரை செல்லுகிறது. சில குடிகள் தந்தை வழியைப் பின்பற்றுகிறார்கள். சில பழங் குடிகளில் மருமக்கத் தாய முறை இருக்கிறது. அதாவது, ஒருவனது சொத்துக்கு அவனுடைய

மருமகனே வாரீசு. மக்கள் தாய முறையைச் சில பிரிவினர் பின்பற்றுகிறார்கள். அதன்படி, ஒருவனுடைய சொத்து அவனுடைய பிள்ளைகளைச் சேர்கிறது.

## நீலகிரிப் பழங்குடிகள்

தமிழ் நாட்டின் மேற்குப் பாகத்தில் நீலகிரி மலை இருக்கிறது. அங்கு தோதவர், கோட்டர், படகர் என்ற பழங்குடிகள் வசிக்கிறார்கள்.

முன்பு நீலகிரிப் பகுதி முழுவதும் தோதவர்கள் வசமே இருந்தது. அவர்கள் தன்மானம் உள்ள பழங்குடிகள். உடல் வலிமை வாய்ந்தவர்கள். பெண்களுடன் ஆண்களுக்கும் நீண்ட கூந்தல் உண்டு. ஆண்கள் தாடியும் வளர்க்கிறார்கள். தோதவர்கள் கழுத்திலிருந்து கணுக்கால் வரை ஆடையைப் போர்த்திக் கொள்கிறார்கள். அவர்களது வீடுகள் வண்டிக் கூண்டுபோல் காட்சி அளிக்கின்றன. பால், நெய், தயிர், தானியங்கள், பழங்கள் முதலியவை அவர்களது உணவுப் பொருட்கள். வழக்கமாகச் சைவ உணவே சாப்பிடுகிறார்கள். சில சடங்குகளின் போது வைதிகமாக மாமிசமும் அருந்துகிறார்கள்.

சில காலத்துக்கு முன் தோதவர்களின் இனம் குறுகிக்கொண்டே வந்தது. சில நூறு பேர்கள் தாம் எஞ்சியிருந்தனர். மூடநம்பிக்கையால் பெண் சிசுக்களை அவர்கள் கொன்றதே இதற்கு முக்கிய காரணம். வியாதிகள் மற்றொரு காரணம். அர

சாங்கம் தலையிட்டுப் பெண்சிசுக் கொலையைத் தடுத்தது. வைத்திய உதவிக்கும் சர்க்கார் ஏற்பாடு செய்தனர். வேறு பல ஊழியர்களும் தோதவர் களுக்குத் தொண்டுசெய்கின்றனர். இதன் பலனாகத் தோதவர் குலம் மறுபடி தழைத்து வருகிறது.



கால்நடைச் செல்வத்தைத் தோதவர்கள் போற்றுகிறார்கள். பால் பண்ணையைத் தெய்வீக மாகக் கருதுகிறார்கள். இப் பண்ணைகளுக்குப் பூசாரி கள் உண்டு. எருமை மாட்டுக்குச் சில சடங்குகள் நடத்துகிறார்கள். முன்பு பெண்களுக்குக் கன்னி

அழிப்புச் சடங்கு நடத்தி வந்தார்கள். பிறகு இந்த வழக்கத்தைக் கைவிட்டு விட்டார்கள்.

பெண் சிசுக்கொலை காரணமாக முன்பு தோதவர் பெண்களின் தொகை குறைந்தது. அதனால் ஒரு பெண் பல ஆண்களை மணக்க வேண்டியதாயிற்று. இப்போது பெண்கள் எண்ணிக்கை அதிகரித்திருக்கிறது. அதனால் ஒரு பெண் ஒரு ஆணையே மணக்கிறாள். ஆனால் குடும்பத்துக்குள் பொது மனைவி முறை இருக்கிறது. அதாவது, சகோதரர்கள் ஆளுக்கு ஒரு பெண்ணை மணக்கலாம். ஆயினும் ஒவ்வொரு பெண்ணும் எல்லாச் சகோதரர்களுக்கும் பொது மனைவி ஆகிறாள். தவிர, கணவன் அனுமதித்தால் வேற்று ஆணுடனும் ஒரு பெண் உறவு கொள்ளலாம்.

சில காலத்துக்கு முன் நீலகிரியில் தோதவர்கள் மாத்திரமே இருந்தனர். பிறகு வேறு இனத்தாரும் அங்கு குடியேறினர். அவர்களுடன் போட்டியிடத் தோதவர்களால் முடியவில்லை. புது நிலைமைக்கு ஏற்ப அவர்கள் மாறிக்கொள்ளவும் இல்லை. அதனால் நாளாவட்டத்தில் அவர்களது செல்வம் குறைந்தது. வறுமை பீடித்தது. சென்ற சில ஆண்டுகளாகத்தான் அவர்கள் நிலை மறுபடி உயர்ந்து வருகிறது.

தோதவருக்குப் பின் நீலகிரியில் குடியேறியவர் படகர்கள். காலத்துக்கு ஏற்றபடி இவர்கள் முன்னேறியிருக்கிறார்கள். இவர்களைப் பழங்குடி மக்கள் என்றே சொல்ல முடியாது. அவ்வளவு மாறியிருக்

கிருர்கள். எனினும் ஒரு பழைய வழக்கத்தை அவர்கள் இன்னமும் கடைப்பிடிக்கிருர்கள். அதாவது, இறந்தோரின் உடலைப் பெரிய சப்பரத்தில் எடுத்துச் செல்கிருர்கள். படகர்கள் பயிர்த்தொழில் செய்து வளமுடன் வாழ்கிருர்கள்.

நீலகிரியில் கோட்டர் என்ற பழங்குடிகளும் உள்ளனர். இவர்கள் கைத்தொழில்களில் கைதேர்ந்தவர்கள். கொல்லு வேலை, தச்சு வேலை, சட்டி பானை வனைவது முதலியவை இவர்களுக்குத் தெரியும். ஆடு மாடுகளையும் மேய்க்கிருர்கள். அதோடு, இசையிலும் தேர்ச்சி உள்ளவர்கள். கோட்டர் இனத்தில் சகோதர ஒற்றுமை அதிகம். ஒருவன், தனது சகோதரனின் மனைவியுடன் உறவு கொள்வதற்குத் தடையில்லை.

## மலையாளப் பழங்குடிகள்

தமிழ் நாட்டுப் பழங்குடிகள் சிலரை இதுவரை பார்த்தோம். நமது அண்டையில் உள்ள மலையாளப் பிரதேசத்திலும் பழங்குடிகள் வசிக்கிருர்கள். அவர்களை இனிச் சந்திக்கலாம்.

இந்தப் பழங்குடிகளில் அரநாடர் ஒரு வகையினர். இவர்கள் மிகவும் பின்தங்கியவர்கள். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முந்திய நிலையிலேயே வாழ்கிருர்கள். இவர்களுக்குப் பயிர் செய்யத் தெரியாது. கந்த மூலங்களையும் சிறிய பிராணிகளையும் உண்கிருர்கள்.

முத்துவர், கணிக்கர், இருளர், பணியர் ஆகியோர் வேறு சில பழங்குடிகள். இவர்கள் அர

நாடரை விட முன்னேறியவர்கள். செடி கொடிகளைக் கொளுத்திவிட்டு இவர்கள் விவசாயம் செய்கிறார்கள்.

கேரள இராச்சியத்தில் ஒரு பகுதியின் பெயர் வய நாடு. அங்கு பழங்குடிகள் ஏராளம். முன் காலத்தில் இவர்களுக்குப் பெரிய பெரிய காடுகள் சொந்தமாய் இருந்தன, விவசாயமும் செய்து வந்தனர். பின்னால் ஆங்கிலேயர்கள் இங்கு வந்தார்கள். காடுகளை இவர்கள் பறித்துக் கொண்டார்கள். அவற்றை அழித்து காபி, ஏலம், மிளகுத் தோட்டங்களை அமைத்தார்கள். பழங்குடியினர் பலர் இந்தத் தோட்டங்களில் வேலை செய்கிறார்கள்.

வய நாடன் செட்டிகள் என்ற பழங்குடியினர் விவசாயம் செய்கிறார்கள். இவர்கள் மருமக்கத் தாய முறையைத் சேர்ந்தவர்கள். இவர்களது திருமணம் இரண்டு வகைப்படும். ஒரு முறையின்படி, மணமான பெண் தனது கணவன் வீட்டில் வசிக்க முடியாது. பிறந்த வீட்டிலேயே இருக்கவேண்டும். மற்றொரு முறைப்படி, கணவன் வீட்டில் மனைவி வசிக்கலாம். வயநாடன் செட்டிகள் வேட்டையில் நிபுணர்கள். ஆண்டுதோறும் புலி வேட்டை விழா நடத்துகிறார்கள். புலியைப் பிடித்து ஈட்டிகளால் குத்துவார்கள். முன்பு இந்தக் குடிகளுக்கு நிலபுலன்கள் நிரம்ப இருந்தன. வெளியூர் லேவாதேவிக்காரர்கள் இவற்றை மெல்ல மெல்லக்கவர்ந்து விட்டார்கள்.

குறிச்சியர் மற்றொரு பழங்குடி மக்கள். இவர்களும் விவசாயிகளே. தாங்கள் உயர்ந்த சாதி

என்று இவர்கள் நினைக்கிறார்கள். அதனால் மற்றப் பழங்குடிகளைத் தீண்டுவதோ நெருங்குவதோ இல்லை. உணவு விஷயத்தில் இவர்கள் கடுமையான ஆசாரம் உள்ளவர்கள்: வெளியார் சமைத்ததை உண்ண மாட்டார்கள். அப்படிச் சாப்பிடுபவர் சாதியிலிருந்து விலக்கப்படுவார். குறிச்சியர் மதுபானப் பிரியர் கள். தெய்வங்களுக்கும் கள்ளைப் படைக்கிறார்கள். இவர்கள் தாய் வழி வமிசத்தைச் சேர்ந்தவர்கள்.



மருமக்கத் தாய வாரீசு முறை கொண்டவர்கள். பெரிய கூட்டுக் குடும்பங்களாக இவர்கள் வசிக் கிறார்கள். ஒரு குடும்பத்தில் சுமார் ஐம்பது பேர் இருப்பர். இவர்கள் வாழும் பிரதேசம் பல பிரிவு களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு பிரி

வுக்கும் ஒரு நாட்டாண்மைக்காரர் உண்டு. குறிச்சி யர்கள் வில் வித்தையில் திறமை வாய்ந்தவர்கள். கள்ளம் கபடு தெரியாதவர்கள், அதனுல் லேவா தேவிக்காரர்கள் இவர்களைச் சுரண்டுகிருர்கள். சில வியாபாரிகளும் ஏமாற்றுகிருர்கள். இதன் விளை வாகக் குறிச்சியரின் நிலபுலன்கள் குறைந்துவிட்டன.

முள்ள குரும்பர் இன்னெரு பழங்குடி மக்கள். இவர்களும் விவசாயிகளே. குறிச்சியரும் இவர் களும் போசனம் கலப்பதில்லை. இந்தச் சாதியாரில் மணப்பெண்ணுக்கு மாப்பிள்ளை தாலி கட்டுவதில்லை. தாய் மாமனே கட்டுகிருர்.

ஊராவி குரும்பர் என்ற குடியினருக்குப் பல கைத்தொழில்கள் தெரியும். சக்கரம் இல்லாமலே சட்டி பானை வனைந்து விடுவார்கள். அதாவது, மண் உருண்டைகளை உள்ளே குடைந்து பாண்டம் செய் கிருர்கள். அரசாங்கக் காடுகளில் கூலியாட்களாக வும் இவர்கள் வேலை செய்கிருர்கள்.

காடர் சாதியார் முன்பு அரசவமிசத்துக்கு ஊழியம் செய்து வந்தார்கள். காலக் கோளாற் றினுல் காட்டில் குடியேற நேர்ந்தது. இப்போது பெரும்பாலோர் விவசாயம் செய்கிருர்கள். இவர் கள் பெரிய வில்லாளர்கள். மருமக்கத் தாய முறை யைப் பின்பற்றுகிருர்கள்.

### ஆந்திரப் பழங்குடிகள்

தமிழ் நாட்டுக்கு வடக்கே ஆந்திர இராச்சியம் இருக்கிறது. அதன் வட கிழக்குப் பகுதியில் ஏரா

ளமான பழங்குடிகள் வசிக்கிருர்கள். இவர்களில் சுமார் இருபது பிரிவுகள் உண்டு. பலர் செல்வ வசதி உள்ளவர்கள். இவர்களுக்கு ஆடல் பாடல் களில் பிரியம் அதிகம். முன்பு இவர்கள் அடிக்கடி கலகம் செய்தார்கள். அதனுல் ஆங்கிலேய சர்க்கார் இவர்களை இமிசித்தனர். இப்போது அரசாங்கம் இவர்களுக்குப் பலவித உதவிகளை அளிக்கிறது.



இந்தப் பழங்குடிகளுள் சவரர் என ஒரு சாதி யார் இருக்கிருர்கள். ஆதி காலத்தில் இவர்கள் இராச்சியம் அமைத்துப் புகழுடன் வாழ்ந்து வந் தார்கள். இராமாயணமும் மகாபாரதமும் கூட

இவர்கள் பெயரைக் குறிப்பிடுகின்றன. அவ்வளவு பழம் பெருமை வாய்ந்தவர்கள். புதிதாக வந்த குடிகளிடம் தோற்று இவர்கள் மலைகளில் ஒதுங்க நேர்ந்தது. மலைச் சரிவுகளில் சவரர் திறமையுடன் சாகுபடி செய்கிறார்கள். இவர்கள் தங்கள் வீட்டுச் சுவர்களில் வண்ணப் படங்களை எழுதுகிறார்கள். தேவதைகளை இதன் மூலம் திருப்தி செய்கிறார்களாம். அதோடு நோய் வராமல் தடுக்கவும், மகசூல்கள் பெருகவும் இந்தச் சித்திரங்கள் உதவுமாம்.

கொண்டா ரெட்டி என்பவர்களும் முன்பு ஆளும் சாதியாராக இருந்தனர். புதிய குடிகளிடம் போரில் தோற்று மலைவாசிகள் ஆனார்கள்.

இன்னொரு சாதியாரின் பெயர் கடபர். இவர்களது முக்கியத் தொழில் விவசாயம். மற்றும் மீன் பிடிக்கிறார்கள்; வேட்டையும் ஆடுகிறார்கள். கடபப் பெண்கள் செடி கொடிகளின் நார்களைச் சிறந்த ஆடைகளாக நெய்கிறார்கள். இதில் திறமை பெறும் பெண்களே கலியாணத்துக்குத் தகுதிஉள்ளவர்கள் கடப மாதர்கள் பெரிய கம்பி வளையங்களைக் காதில் அணிகிறார்கள்.

கோண்டு என்ற சாதியார் முன்பு நரபலி கொடுத்து வந்தார்கள். வெளி ஆட்களைப் பிடித்து வந்து தங்கள் தெய்வங்களுக்குப் பலியிட்டுவிடுவர். ஆங்கிலேய சர்க்கார் கடுமையாகத் தண்டித்து இந்த வழக்கத்தை நிறுத்தினார்கள்.

கோயா சாதியினர் கைத் தொழில்களில் திறமை வாய்ந்தவர்கள். மாட்டுக் கொம்புகள் பிணைத்த தலையணியுடன் இவர்கள் நடனம் ஆடுகிறார்கள்.

## குற்ற பரம்பரையினர்

சில பழங்குடிகள் குற்ற பரம்பரையினர் ஆனர்கள் என்று முன்பு குறிப்பிட்டோம். இவர்களில் ஒரு சாதியார் குறவர்கள். முன் காலத்தில் குறவர்கள் வியாபாரிகளாக இருந்தார்கள். பொதி மாடுகளுடன் ஊர் ஊராகச் சென்று வர்த்தகம் செய்து வந்தனர். பல ஊர்களையும் ஜனங்களையும் நன்ருக அறிந்திருந்தார்கள். அதனுல் அக்கால அரசர்கள் குறவர்களை ஒற்றர்களாகவும் உபயோகித்தார்கள். பிறகு கால மாறுதலால் இவர்களது பிழைப்புப் போய்விட்டது. குற்ற வாழ்க்கையில் இறங்க நேர்ந்தது. திருட்டுத் தொழிலில் தேர்ச்சி பெற்றுர்கள். இவர்கள் போன்ற பழங்குடிகளை ஒடுக்க ஒருசட்டம் இயற்றப்பட்டது. அதன் பெயர் 'குற்ற பரம்பரையினர் சட்டம்'. அது இவர்களுக்குப் பல கட்டுப்பாடுகளை விதித்தது. ஆனல் இந்தச் சட்டத்தால் பலன் கிடைக்கவில்லை. சில வருடங்களுக்கு முன் அது ரத்துச் செய்யப்பட்டது. இப்



போது உதவிகள் அளித்து இந்தப் பழங்குடிகளை முன்னேற்றச் சர்க்கார் முயன்று வருகிறார்கள்.

செஞ்சு சாதியாரும் குற்ற பரம்பரையினரே. இவர்கள் முன்பு காடுகளில் வாழ்ந்து வந்தார்கள். அவர்களது உரிமைகளை அக்கால அரசாங்கம் பறித்தது. அவர்களது வாழ்விடங்கள் சுருங்கின.



இதனால் செஞ்சுக்கள் ஆத்திரம் அடைந்து குற்ற நடவடிக்கைகளில் இறங்கினர். ஆங்கிலேய சர்க்கார் இவர்களை எவ்வளவோ இமிசித்துப் பார்த்தார்கள், பலிக்கவில்லை. இப்போது அரசாங்கம் இவர்களை விவசாயத்தில் ஈடுபடுத்தி வருகிறது.

லம்பாடிகளும் இதோ போல் திசை மாறியவர்கள்தாம். முன் காலத்தில் வட நாட்டிலிருந்து

வந்தவர்கள் இவர்கள். காலப் போக்கில் சொந்த ஊருடன் தொடர்பு அறுந்துவிட்டது. தென்னாட்டில் நாடோடிகளாகத் திரியலானார்கள். லம்பாடிப் பெண்கள் அதிகமான கொசுவம் உள்ள பாவாடைகளை உடுத்துகிறார்கள். மலிவான ஆபரணங்களைச் சுமை சுமையாக அணிகிறார்கள்.

# 3. மத்திய இந்தியப் பழங்குடிகள்

நமது நாட்டின் மத்திய பாகத்தில் பெரிய மலைத் தொடர்கள் இருக்கின்றன. இந்தப் பிராந்தியத்தில் பலப்பல பழங்குடிகள் வசிக்கிறார்கள். நாட்டிலேயே மிக அதிகமான மலைச்சாதியார் இங்கு உள்ளனர்.

தென்னாட்டுப் பழங்குடிகளை விட இவர்கள் முன்னேறியுள்ளனர். பலர் விவசாயம் செய்கிறார் கள். அண்டையில் உள்ள நாகரிக மக்களுடன் இவர்களுக்குத் தொடர்பு இருக்கிறது. அவர்களது பழக்க வழக்கங்கள் பலவற்றை இந்தப்பழங் குடிகள் ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள். ஆதியில் மரவுரி உடுத்திய இவர்கள் இப்போது மில் துணி கட்டுகின்றனர். கிராமங்களை அமைத்து நிலையாக வசிக்கிறார்கள். ஒவ்வொரு கிராமத்துக்கும் ஒரு நாட்டாண்மைக்காரர் உண்டு. கிராம சபைகளும் உள்ளன. அவை உள்ளூர் விவகாரங்களைக் கவனிக் கின்றன. இப் பழங்குடிகள் பெரும்பாலும் மக்கள் வழி வாரிசு முறையைச் சேர்ந்தவர்கள்.

மத்திய இந்திய மலைவாசிகள் குட்டையாகவோ நடுத்தரமாகவோ உள்ளனர். அவர்கள் நிறம் கருப்பு. நீளத் தலை. அகன்ற, தட்டை மூக்கு. தலைமுடி சுருள் சுருளாக இருக்கும்.

இவர்களது திருமண முறைகள் பல வகைப் படும். பொதுவாக, பெண்ணுக்கு மாப்பிள்ளை பரிசப் பணம் கொடுக்க வேண்டும். பெண்ணைக் கவர்ந்து சென்றும் மணக்கலாம். அல்லது ஆணும் பெண்ணும் சேர்ந்து ஊரிலிருந்து ஓடிப் போவார்கள். பிறகு அவர்கள் தம்பதிகளாக ஊர் திரும்பலாம். சில சாதிகளில் கலியாணத்திற்குக் குங்குமப் பொட்டு உதவுகிறது. அதாவது, பெண் ணுக்கு வாலிபன் பொட்டு வைத்தால் அவள் அவ னுடைய மனைவி ஆகிவிடுவாள்.

ஒரௌன் என்ற சாதியார் பயிர்த் தொழில் செய்கிறார்கள். இவர்கள் இளைஞர்களை நல்ல வழி களில் பழக்குகிறார்கள். ஒரௌன் பிரம்மச்சாரிகள் ஒரு தனி விடுதியில் வசிக்கிறார்கள். ஊருக்கு அவர் கள் பல தொண்டுகள் செய்ய வேண்டும். இதே போல் கன்னிப் பெண்களுக்கும் தனி மாடம் உண்டு. இந்த விடுதிகளில் ஆடல் பாடல் நிகழ்ச்சிகளும் நடக்கின்றன. ஒரௌன் சாதியில், மனைவியை இழந்த ஒருவன் மறுபடி கன்னிப் பெண்ணை மணக் கக்கூடாது. விவாக விலக்குப் பெற்ற பெண்ணையோ கைம் பெண்ணையோ தான் மணக்கலாம். ஆனால் இந்த விதியைச் சுலபமாக மீற முடியும். அதாவது, கன்னி யை முதலில் ஒரு மரத்துக்குக் கலியாணம் செய்து வைப்பார்கள். மனைவியை இழந்தவனுக்கு அப் பெண்ணை மறுபடி மணம் செய்வார்கள். ஒரௌன் களில் காதி என்ற உட்பிரிவினர் இருக்கிறார்கள். காதி ஆண், பெண்கள் திருவிழாக் காலத்தில் இஷ்டம் போல் உறவு கொள்கிறார்கள்.

ஹோ என்பது இன்னொரு பழங் குடியின் பெயர். முன்பு இந்தச் சாதியில் கிழட்டுக் கன்னிகைகள் பலர் இருந்தனர். தந்தைமார் அதிகமான பரிசம் கேட்டதால் இவர்களுக்குக் கலியாணம் ஆகவில்லை. பிறகு இந்த நிலைமையை இளைஞர்கள் தந்திரமாக மாற்றினர். அதாவது, பெண்களை அவர்கள் கடத்திச் செல்ல ஆரம்பித்தனர். குமரிகளும் இதற்கு உடந்தையாக இருந்தனர். கடத்திச் சென்று மணப்பது சாதி வழக்கம்தான். அதனால் பேராசைத் தந்தைகளால் ஒன்றும் செய்ய முடியவில்லை. இந்தச் சாதியிலும் விழாக் காலத்தில் ஆண், பெண்கள் விருப்பம் போல் உறவு கொள்ளலாம்.

சந்தலர்கள் சிறந்த விவசாயிகள். இவர்கள் பெரிதும் முன்னேறியுள்ளனர். இவர்கள் அழகான பல்லக்குகளில் கலியாணஊர்வலம் நடத்துகிறார்கள். இந்தச் சாதியில் கன்னிப் பெண்களுக்கு ஒரு தனி உரிமை இருக்கிறது. சண்டித்தனம் செய்து மாப்பிள்ளை பிடிக்கும் உரிமை அது. ஒரு பெண்ணுடன் ஒரு வாலிபன் உறவு கொண்டு அவளை மணப்பதாக வாக்களிக்கிறான். பிறகு அவன் வாக்கு மாறுவதாக வைத்துக் கொள்வோம். உடனே அந்தப் பெண் அவன் வீட்டுக்குள் புகுந்து உட்கார்ந்து விடுவாள். நகரவே மாட்டாள். பிறகு ஊரார் கூடி அந்த இளைஞனை அவளுக்கு மணம் செய்து வைப்பார்கள். சந்தலர்கள் விவாக விலக்குக்கு ஒரு சடங்கு நடத்துகிறார்கள். தம்பதிகள் சூரியனை வணங்கி மூன்று அரசிலைகளைக் கிழித்துப்போடுவர். பிறகு ஒரு தண்ணீர்ப் பானையைக் கவிழ்ப்பார்கள்.

அத்துடன் அவர்கள் உறவு முறிந்துவிடும். கல் நாட்டியோ மண் பீடம் அமைத்தோ சந்தலர் தெய்வ வழிபாடு செய்கிறார்கள். வேறு பல பழங் குடிகளிடமும் இந்த வழக்கம் காணப்படுகிறது.



இந்தப் பகுதியில் கோண்டு என்ற மற்றொரு பழங் குடியினர் உள்ளனர். (தெலுங்கு நாட்டில் உள்ள கோண்டுகள் வேறு, இவர்கள் வேறு.) இந்தச் சாதியில் பாட்டன், பேத்தி இடையேகூடக் கலியாணம் நடக்கிறது. பாட்டி, பேரன் திருமணமும் உண்டு. இவர்களில் ஒரு பிரிவினர் பொது விடுதிகளை அமைத்துள்ளனர். பிரம்மச்சாரிகளும் கன்னிகைகளும் அங்கு இரவைக் கழிப்பர். அவர்கள் இஷ்டம் போல் உறவு கொள்ளலாம். ஆனால் திருமணம் நடக்கும் வரைதான் இது அனுமதிக்கப்படும்.

முண்டர், பூமிஜர், பில், பைகர் என வேறு பல பழங்குடிகளும் இப் பகுதியில் வசிக்கிறார்கள்.


Y72
N61
78207

# 4. வட கிழக்குப் பழங் குடிகள்

நம் நாட்டின் வட கிழக்குப் பகுதியில் மலைகள் நிறைந்துள்ளன. அங்கு பலவகைப் பழங் குடிகள் வாழ்கிறார்கள். இவர்கள் பெரும்பாலும் மஞ்சள் நிறத்தினர். தலைமுடி குச்சி குச்சியாக இருக்கும். சப்பை மூக்கு, இடுங்கிய கண்கள். ஆணும் பெண்ணும் தசை பலம் வாய்ந்தவர்கள். எவ்வளவு உயர மலையிலும் பெரிய சுமைகளுடன் ஏறிவிடுவார்கள். மலைச் சரிவுகளில் பயிர் செய்தும் வேட்டையாடியும் பிழைக்கிறார்கள். இவர்கள் நெசவுத் தொழிலில் கைதேர்ந்தவர்கள். ஒடுக்கமான தறிகளில் அழகான ஆடைகளை நெய்கிறார்கள். எல்லோரும் பகல் முழுதும் உழைக்கிறார்கள். மாலையில் ஆடிப் பாடி உல்லாசமாகப் பொழுது போக்குகின்றனர்.

இந்தப் பழங்குடிகள் சுதந்திர உணர்ச்சி உள்ளவர்கள். யாருக்கும் பணியமாட்டார்கள். இவர்கள் இடையே அடிக்கடி சண்டை மூள்வதுண்டு. அதனால் எப்போதும் போருக்கு ஆயத்தமாக இருப்பார்கள். பகைவர் நெருங்காதபடி மலை விளிம்புகளில் தங்கள் கிராமங்களை அமைக்கின்றனர்.

இங்கு உள்ள லெப்சா என்ற சாதியில் ஒரு பெண் பல ஆண்களை மணக்கலாம். கல்லோங் சாதி

யிலும் இப்படித்தான். ஆனால் பெரும்பாலும் ஒரு பெண் ஒரு ஆணையே மணக்கிறாள். லாக்கர் என்ற பழங் குடியில் விதவை மருமகளை மாமனார் மணப்பது உண்டு. தகப்பன் இறந்தால் அவனது இளைய தாரத்தை மூத்த குடியாளின் மகன் மணக்கலாம்.

காரோ சாதியில் மாமியார் விதவையானால் அவளை மாப்பிள்ளையே மணக்கிறான். சொத்துக் காக அவன் இவ்வாறு செய்கிறான். தாய் வழியில் சொத்து இறங்குகிறது. மாமியார் வேறு யாரை யாவது மணந்தால் மாப்பிள்ளைக்குத்தானே நஷ்டம்! இந்தக் குடியில் ஆண்களை விடப் பெண்கள் நிலை உயர்வானது. காசி சாதியிலும் இப்படித்தான். காசிகளில் கலியாணமான பெண் புக்ககம் போவதில்லை. மாப்பிள்ளைதான் மாமியார் வீட்டில் வசிக்க வேண்டும். அங்கு அவனுக்கு மதிப்பு எப்படி இருக்கும்! காசி சாதியில் விவாக விலக்குகள் அதிகம்.

இந்தப் பகுதியில் நாகர்கள் முக்கியமான பழங் குடிகள். நாகர் இனத்தில் பல உட்பிரிவுகள் உள்ளன. முன்பு இவர்கள் தலை வேட்டை ஆடுவதுண்டு. அதாவது, மனிதத் தலைகளை வெட்டிக் கொண்டு போய் விடுவர். அந்த மண்டை ஓடுகளைத் தம் வீட்டில் வைத்திருப்பர். மூடநம்பிக்கையே இந்த வழக்கத்திற்குக் காரணம். வீட்டில் மண்டை ஓடுகள் இருந்தால் தெய்வ சக்தி பெருகுமாம். இந்தச் சக்தி குறைந்தால் பயிர் விளையாதாம். பிணிகள் பரவுமாம். அதிகமான தலைகளை வாங்கியவனுக்கு

மதிப்பு அதிகம். அவனே சிறந்த ஆடை ஆபரணங் களை அணியலாம். அவன் இறந்தால் சமாதி கட்டி மரியாதை செய்வார்கள். தட்டு முட்டுச் சாமான் களில் கூட மனிதத் தலையின் உருவத்தை நாகர்கள் பொறிக்கிறார்கள். தலை வேட்டை ஆடுவது இப் போது அநேகமாய் நின்றுவிட்டது.



ஆலோ நாகர் என்ற சாதியினர் வாழ்க்கையை ஆறு கட்டங்களாகப் பிரித்துள்ளனர். ஒவ்வொரு கட்டத்திலும் ஒருவன் சில ஆண்டுகள் இருக்க வேண்டும். கடைசிக் கட்டத்தில் அவன் பூசாரி ஆகலாம். இதுவே மிக உயர்ந்த பதவி. பிரம்மச் சாரிகளுக்கு முக்கியமான கடமைகள் உண்டு. அவர்கள் தூங்கும் போதும் ஆயுதபாணிகளாக

இருக்க வேண்டும். இரவும் பகலும் கிராமத்தைக் காக்க வேண்டும். தனி விடுதிகளில் அவர்கள் வசிக்க வேண்டும். அங்கு அவர்களுக்குச் சாதிவழக்கங்கள் போதிக்கப்படுகின்றன. இந்த நாகர்களில் திருமணத்துக்கு முன் ஆண், பெண் உறவுகளுக்குத் தடை இல்லை.

நாகர்கள் பிரேதங்களை மூங்கில் பரணில் கிடத்துகிருர்கள். சுற்றிலும் ஆடை ஆபரணங்கள், ஆயுதங்கள், கூடைகள் முதலியவற்றைத் தொங்க



விடுகிருர்கள். காற்று, மழை, வெய்யிலில் இவை அழிகின்றன.

குக்கி சாதியில் வயதுக்கு மூத்த பெண்களை ஆண்கள் மணப்பதுண்டு. இவர்கள் அத்தை மகளைக் கலியாணம் செய்வதில்லை. மாமன் மகளைத்தான் மணக்கலாம்.

புரும் என்ற சாதியில் பெண் எடுப்பது சிரமமான காரியம். மணமகன் மூன்று வருட காலம் மாமனர் வீட்டில் ஊழியம் புரிய வேண்டும். ஏவின வேலை யெல்லாம் செய்ய வேண்டும். அங்கு அவனுக்குச் சாப்பாடு கிடைக்கும். கடைசியில் பெண்ணும் கொடுப்பார்கள்.

அபோர்,ஆக்கா, காம்டி முதலிய வேறு பல பழங்குடிகளும் இந்தப் பகுதியில் உள்ளனர்.

# 5. அந்தமான் பழங் குடிகள்

அந்தமான், நிக்கோபார் தீவுகள் பற்றி முன்பு குறிப்பிட்டோம். இத் தீவுகளில் சில பழங்குடிகள் இருக்கிறார்கள். வெளியார்களை இவர்கள் முன்பு வெறுத்து வந்தார்கள். அந்நியனைக் கண்டால் கொன்று உடலை எரித்துவிடுவர். வெளியாரிடம் இருந்த பயமே இந்த வெறுப்புக்குக் காரணம். ஜாரவா என்ற சாதியார் இப்போதுகூட அந்நியரை அண்டவிடுவதில்லை. ஆனால் ஓங்கே என்ற சாதியாரின் உக்கிரம் குறைந்திருக்கிறது.

ஓங்கே ஒரு குள்ள சாதி. அவர்கள் உயரம் சுமார் நாலரை அடிதான். ஆனால் வலிமை வாய்ந்தவர்கள். அவர்களது உதடுகள் பிதுங்கினாற் போல் இருக்கும். அண்டங் கரிய நிறம். தலைமுடி மிகக் குட்டையாகவும் சுருண்டும் இருக்கிறது.

ஓங்கேக்கள் அநேகமாய்ப் பிறந்தமேனியாகவே திரிகிறார்கள். இடுப்பில் ஒரு நார்ப் பட்டையைக் கட்டிக் கொள்கிறார்கள். கொழுப்புக் கலந்த களி மண்ணை உடம்பில் பூசிக்கொள்கிறார்கள். அது ஒரு அலங்காரம்.

இவர்களுக்கு விவசாயம் செய்யத் தெரியாது. சட்டிபானைகூட வனைவதில்லை. புதிதாக நெருப்பு



உண்டாக்கவும் தெரியாது. அதனால் எப்போதோ கிடைத்த நெருப்பை அணையாமல் பாதுகாத்து வருகிறார்கள். இயற்கை தரும் உணவுகளைச் சேகரிக்கிறார்கள். வில்லின் உதவியால் வேட்டையாடுகிறார்கள். அம்பு எய்தே மீனும் பிடிக்கிறார்கள். உணவு தேடுவதில் பகல்நேரம் கழிகிறது. அந்தியில் சாப்பிட்டுவிட்டு ஆடிப் பாடி மகிழ்கிறார்கள்.

ஓங்கேக்கள் சிறு சிறு கோஷ்டிகளாக வாழ்கிறார்கள். ஒவ்வொரு கோஷ்டிக்கும் ஒரு நாட்டாண்மைக்காரர் உண்டு. ஒரு கோஷ்டியைச் சேர்ந்தவர்கள் ஒரே பெரிய குடிசையில் வசிக்கிறார்கள்.

உலகத்தில் வேறு ஒரே ஒரு பகுதியில்தான் இம்மாதிரிக் குள்ள இனத்தினர் உண்டு. ஆகவே அந்தமான் குள்ளர்கள் அபூர்வப் பழங்குடிகள் ஆவர்.

# 6. பழங்குடிகளும் நாமும்

பழங் குடிகளைக் காட்டுமிராண்டிகள் என்று நாம் கருதுகிறோம். இது தவறான கருத்து. அவர்க ளிடம் சில விசித்திரப் பழக்கங்கள் இருக்கலாம். ஆனால் அவர்கள் பண்பு அற்றவர்கள் அல்ல. உயர்ந்த பண்புகள் பல அவர்களிடம் உண்டு.

அவர்கள் ஒற்றுமையாக வாழ்கின்றனர். பொது நன்மைக்காக எல்லோரும்பாடுபடுகிறார்கள். பெரியோர் சொல்லை மதிக்கிறார்கள். ஊர்க் கட்டுப் பாடுகளுக்கு அடங்கி நடக்கிறார்கள். கூடிப்பேசியே பொதுப் பிரச்சினைகளை முடிவு செய்கிறார்கள். ஊர்த் தொண்டு செய்வதற்கு இளைஞர்களைப்பழக்கு கின்றனர்.

கொடிய விலங்குகளின் மத்தியில் பழங் குடிகள் வாழ்கிறார்கள். அவர்களுடைய வீரத்துக்கு அளவே யில்லை. பகல் முழுதும் பாடுபடுகிறார்கள். மாலையில் ஆடிப்பாடிக் களிக்கிறார்கள். இரவில் சீக்கிரமே உறங்கிவிடுவர், இடையிடையே விழாக்கள் கொண் டாடுகிறார்கள். நாகரிக மனிதரைப் போல் அவர்கள் கவலையில் கரைவதில்லை. அவர்கள் நேர்மையான வர்கள்; சூது வாது அறியாதவர்கள்.

பெரும்பாலான பழங்குடிகள் முறையாகத் திருமணம் செய்து கொள்கிறார்கள். சில சாதிகளில் தான் விபரீத சம்பந்தங்கள் காணப்படுகின்றன. பெரும்பாலும் ஒரு ஆண் ஒரு பெண்ணையே மணக்கிறான். வயதுவந்த பிறகே கல்யாணம் நடக்கிறது. விதவைகளுக்குக் கொடுமை இல்லை. அவர்கள் மறுமணம் செய்து கொள்ளலாம். பொருந்தாத தம்பதிகள் பூசலிட்டுக் கொண்டு இருப்பதில்லை. ஒத்து வராவிட்டால் திருமணத்தை ரத்துச் செய்கின்றனர். பெண்களைப் பழங் குடிகள் கௌரவமாக நடத்துகிறார்கள். பல குடிகளில் பெண்களுக்குச் சொத்துரிமை உண்டு.

சில பழங்குடிகள் அவ்வப்போது சண்டை போடுகிறார்கள். ஒருசிலரைக் கொல்லவும் செய்கிறார்கள். ஆனால் நாகரிக மனிதர்கள் மாத்திரம் என்ன செய்கிறார்கள்? யுத்தங்களில் இலட்சக் கணக்கான மக்களைக் கொல்கிறார்கள். மனித இனத்தைப் பூண்டோடு அழிக்கக்கூடிய ஆயுதங்களைத் தயாரிக்கிறார்கள்.

பழங்குடிகளின் வாழ்க்கை பூரணமானது என்று யாரும் சொல்லவில்லை. அவர்களுக்கும் பல குறைகள் இருக்கின்றன. அவர்கள் பெரும்பாலும் ஏழைகள். எழுத்து வாசனை இல்லாதவர்கள். வியாதி வந்தால் வைத்திய வசதி இல்லை.

நாட்டில் உள்ள மற்ற ஏழைகளைப் போன்றவர்களே பழங்குடிகளும். அவர்களுக்கு உதவி செய்ய வேண்டும். நமது அரசியல் சட்டம் இதற்கு வழி

காட்டுகிறது. அதுவே நாட்டின் அடிப்படைச் சட்டம். பழங்குடிகளுக்குச் சட்டசபைகளில் ஸ்தானங்கள் ஒதுக்கப்பட்டுள்ளன. அரசாங்க உத்தியோகங்களில் ஒரு பங்கு அவர்களுக்கு ஒதுக்கப்படுகிறது. பழங்குடிகள் நலனைக் கவனிக்கத் தனி அதிகாரிகள் இருக்கிறார்கள். இந்த மக்கள் கல்வி கற்பதற்குப் பல சலுகைகள் வழங்கப்படுகின்றன. நிலையான விவசாயத்தில் அவர்களை ஈடுபடுத்தவும் அரசாங்கம் உதவி செய்கிறது. குடிசைத் தொழில்களும் ஏற்படுத்தப்படுகின்றன. பழங்குடிப் பகுதிகளில் சாலைகள் அமைக்கப்படுகின்றன. வெளி உலகுடன் அவர்கள் உறவாடுவதற்கு இவை உதவும். வைத்திய வசதிகளும் பரவி வருகின்றன. அவர்களது கடன் பளுவைக் குறைக்கச் சட்டங்கள் இயற்றப்பட்டுள்ளன. பழங்குடிகள் சுயேச்சையாக வாழ்வதை அரசாங்கம் அனுமதிக்கிறது.

பழங்குடிகள் நம் தாய் நாட்டின் மூத்த குழந்தைகள். அதனால் நாட்டு வளத்தில் அவர்களுக்கு முதல் உரிமை உண்டு. நாம் அவர்களைச் சகோதரர்களாகக் கருதவேண்டும். அவர்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்யவேண்டும். பிறகு அவர்களும் நம்மைச் சகோதரர்களாகக் கருதுவர். எல்லோரும் ஒரே குடும்பமாக வாழலாம்.

---

78227
Y72
N61

